ஸ்ரீமதே ஹயக்ரீவாய நம:

# ஹயக்ரீவ ஸ்தோத்ரம்

உரையவதாரிகை. கச்சிமா நகரில் விளக்கொளியெம்பெருமான் ஸந்நிதியின் பரிஸரத்தில் திருமலைமால் திருமணியாய்ச் சிறக்க வந்து தோன்றித் தமது மாதுலராகிய அப்புள்ளாருடைய திருவருளுக்கிலக்காகி நடாதூரம்மாளுடைய திவ்ய கடாக்ஷத்தையும் இளமையிலே பெற்று "ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாத்ஸாவித்ய நுபதி வாத்யாம் ராமாநுஜாப்யாம் ஸம்யந் த்ருஷ்டேந ஸர்வம் ஸஹநிசிதியா வேங்கடேசேந" என்று (அதிகரண ஸாராவளியின் உபக்ரமத்திலே) அருளிச் செய்தபடியே அவ்விருவருடையவும் திருவருளாலே வளர்ந்த மிக விலக்ஷணமான மேதாவிலாஸத்தையுடையராய் ஸகல சாஸ்த்ரார்த்த தத்வஜ்ஞராய் விளங்கிவருகையில், தென்திசைத் திருப்பதிகளை மங்களாசாஸநம் செய்யத் திருவுள்ளங்கொண்டு பேரருளாளனது நியமனம்பெற்றுப் புறப்பட்டெழுந்தருளுகையில், பரம பாவனமான கருட நதியின் கரையில் தெய்வநாயகனுடைய ஸந்நிதாந ஸாரஸ்யத்தையும் ஓஷதாத்ரியின் வாய்ப்பையும் நோக்கித் திருவயிந்திர புரத்திலே சிலகாலம் வஸிக்கத் திருவுள்ளமாய், அத்திருமலையின்கண் வீற்றிருந்து, முன்பு ஸ்வாசார்ய ஸந்நிதியில் பெற்றிருந்த வைநதேய மந்த்ரத்தை நியதராய் ஆவ்ருத்திபண்ணிக் கொண்டிருக்க, ஒரு நாள் ஸுப்ரஸந்நராய் ஸாக்ஷாத்காரம் தந்தருளின பெரிய திருவடி ஸ்ரீஹயக்ரீவ மந்த்ரத்தை உபதேசித்துச்செல்ல, பிறகு ஆங்கு அழகிய சிங்கர் திருமுன்பே ஹயக்ரீவ மஹா மந்த்ரத்தை நெடுநாள் ஜபித்துக் கொண்டெழுந்தருளியிருக்க, வெள்ளைப் பரிமுகரும் ஸுப்ரஸந்நராய்க் காட்சி தந்து தம்முடைய வாகம்ருதத்தை யூட்டி அநுக்ரஹித்து மறைந்தருள, ஆசிரியர் பரமாநந்த பாராவார நிமக்நராய் க்ருதார்த்தராய் எழுந்து அருளிச் செய்ததாம் இந்த ஹயக்ரீவ ஸ்தோத்ரம்.

{ ஜ்ஞாநாநந்தமயம் தேவம் நிர்மலஸ்படிகாக்ருதிம்,
ஆதாரம் ஸர்வவித்யாநாம் ஹயக்ரீவமுபாஸ்மஹே. }

{ ஸ்வதஸ்ஸித்தம் சுத்தஸ்படிகமணிபூப்ருத்ப்ரதிபடம்
ஸுதாஸத்ரீசீபிர் த்யுதிபிரபதாபத்ரிபுவநம்,
அநந்தைஸ்த்ரய்யந்தைரநுவிஹிதஹேஷாஹலஹலம்
ஹதாசேஷாவத்யம் ஹயவதந மீடீமஹி மஹ:. 1 }

[ஹயவதநம் மஹ: ஈடீமஹி.] குதிரைமுகமாய் விளங்குமொரு தேஜஸ்ஸைத் துதிக்கக் கடவோம். அது எப்படிப்பட்டதென்னில், [ஸ்வதஸ்ஸித்தம்] அஸ்மதாதிகளைப் போலே கர்ம நிபந்தனமான தோற்றத்தையுடையதன்றிக்கே கருணையினாலே ஸ்வயம் வ்யக்தமானது. [சுத்த ஸ்படிகமணிபூப்ருத் ப்ரதிபடம்] நிர்மலமான ஸ்படிகக் கல்மயமான மலையோடு தோள் தீண்டியாயிருக்கும். அதுபோலே வெண்ணிறமுடையதென்கை. [ஸுதாஸத்ரீசீபி: த்யுதிபி: அபதாபத்ரிபுவநம்] அம்ருத மென்னலாம்படியான ஒளி விளக்கத்தாலே மூவுலகையும் தாபமற்றதாகச் செய்யுமது. [அவதாதத்ரிபுவநம்] என்றும் பாடமுண்டு. மூவுலகையும் வெண்ணிறமாக்குமதென்கை. [அநந்தை: த்ரய்யந்தை: அநுவிஹிதஹேஷாஹலஹலம்] குதிரையின் கனைத்தலுக்கு 'ஹேஷா' என்று பெயர். ஹல ஹல வென்பது ஒலிக்குறிப்பு. ஹயக்ரீவனுடைய கனைப்பு அநந்த வேதாந்த த்வநிமயமாயிருக்குமென்றபடி. [ஹதாசேஷாவத்யம்] அகில ஹேயப்ரத்யநீகமாயுமுள்ளது. ஆக

இப்படிப்பட்ட ஹயக்ரீவ ஸம்ஜ்ஞமானதொரு தேஜஸ்ஸைத் துதிப்போமென்று ப்ரதிஜ்ஞை செய்து மேலே தொடங்குகின்றாராயிற்று. ... (1)

ஸமாஹாரஸ்ஸாம்நாம் ப்ரதிபதம்ருசாம் தாம யஜுஷாம்
லய: ப்ரத்யூஹாநாம் லஹரிவிததி: போத ஜலதே:,
கதார்ப்பக்ஷுப்ப்யத்கதககுலகோலாஹலபவம்
ஹரத்வந்தர்த்வாந்தம் ஹயவதந ஹேஷா ஹலஹல:. 2

[ஹயவதநஹேஷாஹலஹல: அந்தர்த்வாந்தம் ஹரது] ஹயக்ரீவன் ஹலஹலவென்று கனைக்கும் த்வநி விசேஷமானது நம்முடைய அகவிருளை அகற்றவேணும். எப்படிப்பட்ட அகவிருளென்னில்; [கதார்பக்ஷுப்யத்-கதககுல-கோலாஹலபவம்] குத்ஸிதவாதங்கள் செய்வதிலுண்டான செருக்கினலே கொக்கரித்துக் கிளரும் துர்வாதிகளின் கூட்டங்கள் கண்டதையும் பிதற்றிச் சில கோலாஹலங்கள் செய்வதுண்டே, அதில் மயங்கி 'இவர்கள் சொல்லுவது தான் தத்துவம்போலும்' என்று கொள்ளுகையாகிற ஓர் அஜ்ஞான விருளுண்டாகுமே; அது தீரக்கடவதென்கை. ஹயக்ரீவனுடைய ஹேஷா ஹலஹலம் எப்படிப்பட்டதென்ன, அது இருக்கும்படி சொல்லுகிறது பூர்வார்த்தம். [ஸாம்நாம் ஸமாஹார:] ஸாமவேதம் திரண்ட திரட்சியோவென்னும்படியிருக்கும். [ருசாம் ப்ரதிபதம்] ருக்வேத பர்யாயமென்னலாம்படியிருக்கும். [யஜுஷாம் தாம] யஜுர்வேதங்களுக்கு உறைவிடமாயிருக்கும். ஆக, த்ரயீமயமென்றதாயிற்று. [ப்ரத்யூஹாநாம் லய:] இடையூறுகளையெல்லாம் தொலைக்கவல்லதென்கை. லயகர்தா என்கிற தாத்பர்யத்திலே லய: என்கிறது. [போதஜலதே: லஹரிவிததி:] ஞானக் கடலின் அலைவரிசையோ என்னலாம்படியிருக்கும்.

மூன்றும் பாதம் கதாக்ருப்யத்கோதஸ்குத கலஹ கோலாஹலபவம் என்கிற பாடமாகவும் வழங்குவதுண்டு. .... .... .. .... (2)

ப்ராசீ ஸந்த்யா காசிதந்தர்நிசாயா: ப்ரஜ்ஞாத்ருஷ்டேரஞ்ஜநஸ்ரீரபூர்வா,
வக்த்ரீ வேதாந் பாதுமே வாஜிவக்த்ரா வாகீசாக்யா வாஸுதேவஸ்ய மூர்த்தி:.

[வாஜிவக்த்ரா வாகீசாக்யா வாஸுதேவஸ்ய மூர்த்தி: மே பாது]—குதிரை முகம் வாய்ந்ததாய் வாக்தேவதையென்று பெயர் பெற்றதொரு வாஸுதேவனது திருமூர்த்தியானது என்முன் தோன்றக்கடவது. அஃது எப்படிப்பட்டதென்னில் [அந்தர் நிசாயா: காசித் ப்ராசீ ஸந்த்யா] அகவிருள் தொலைந்து ஜ்ஞாநோதயமாவதற்கு அருள் செய்யும் மூர்த்தியாகையாலே, அஸ்மதாதிகளின் உள்ளிரவு விடிந்து கீழ்வானம் வெள்ளென்றதென்னலாம்படியுள்ளது. [ப்ரஜ்ஞாத்ருஷ்டே: அபூர்வா அஞ்ஜநஸ்ரீ:] ஜ்ஞாநசக்ஷுஸ்ஸானது கொழுந்து விட்டோங்குவதற்குறுப்பாய் விலக்ஷணமானஸித்தாஞ்ஜநம் போன்றுளது. [வக்த்ரீ வேதான்] வேதங்களை யெல்லாம் ஒருகால் வெளியிட்டருளினது. ஆகவிப்படிப்பட்ட பெருமைவாய்ந்த ஹயக்கிரீவமூர்த்தி என் கண்ணும் நெஞ்சும் வாயுமிடங்கொண்டு விளங்கக் கடவதென்கை. (3)

விசுத்தவிஜ்ஞாநகநஸ்வரூபம் விஜ்ஞாநவிச்ராணநபத்ததீக்ஷம்,
தயாநிதிம் தேஹப்ருதாம் சரண்யம் தேவம் ஹயக்ரீவமஹம் ப்ரபத்யே. 4

[ஹயக்ரீவம் தேவம் அஹம் ப்ரபத்யே] ஹயக்ரீவ பகவானை அடியேன் அடிபணிகின்றேன். அவர் தாம் எப்படிப்பட்டவரென்னில்; [விசுத்தவிஜ்ஞாநகநஸ்வரூபம்] நிர்மலமான ஞானமே வடிவெடுத்ததென்னலாம்படி ஞானஸ்வரூபியாயுள்ளவர். [விஜ்ஞாந]

விச்ராணநபத்நதீக்ஷம்] அடியார்களுக்குச் சிறந்த ஞானத்தை வரப்ரஸாதமாக அளித்தருள்வதில் ஆஸ்தையுடையவர். விச்ராணநம் — தாநம். [தயாநிதிம்] கருணைக்கடலாகவுள்ளவர். [தேஹப்ருதாம் சரண்யம்] தேஹிகளுக்கெல்லாம் புகலாயுள்ளவர். ஆகவிப்படிப்பட்ட ஹயகிரீவ தேவனைப் புகலொன்றில்லா வடியேன் அடிக்கீழமர்ந்து புகுகின்றேனென்கை. ... ... ... ... ... (4)

{ அபௌருஷேயை ரபி வாக்ப்ரபஞ்சைঃ அத்யாபி தே பூதிமத்ருஷ்டபாராம்,
ஸ்துவந்நஹம் முக்த்த இதி த்வயைவ காருண்யதோ நாத கடாக்ஷணீய:. 5 }

[நாத! அபௌருஷேயை: வாக்ப்ரபஞ்சை: அபி அத்யாபி அத்ருஷ்டபாராம் தே பூதிம் ஸ்துவந் அஹம் முக்த்த: இதி த்வயைவ காருண்யத: கடாக்ஷணீய:]—அசரண்ய சரண்யரான ஹயக்ரீவ பகவானே! உம்முடைய பெருமையை வேதவாக்குக்களெல்லாம் திரண்டெழுந்து பேசத் தொடங்கி இன்னமும் எல்லை காணமாட்டாமல் "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்னும்படி நிற்க, 'அப்படிப்பட்ட அபாரமான பெருமையைத் துதிப்பதாக விழிந்த அடியேனை 'இவனொரு சிறு பையல்' என்று திருவுள்ளம் பற்றிக் கருணையோடு கடாக்ஷிக்கவேணுமென்கை. ... ... ... (5)

{ தாக்ஷிண்யரம்யா கிரிசஸ்ய மூர்த்தி: தேவீ ஸரோஜாஸநதர்மபத்நீ,
வ்யாஸாதயோபி வ்யபதேச்யவாச: ஸ்ப்புரந்தி ஸர்வே தவ சக்திலேசை:. 6 }

வாரீர் ஹயக்ரீவரே! [ஸர்வே தவ சக்திலேசை: ஸ்ப்புரந்தி]-வாக்கில் வல்லவர்களென்று பேர் பெற்றாரெல்லாரும் தேவரீருடைய சக்தியில் ஏகதேசத்தினால் விளங்குகிறார்களத்தனை. அவர்கள் யாரென்னில், [கிரிசஸ்ய தாக்ஷிண்யரம்யா மூர்த்தி:] தக்ஷிணாமூர்த்தியென்று ப்ரஸித்தமான ருத்ரமூர்த்தியும், [ஸரோஜாஸநதர்மபத்நீ தேவீ]—கமலாஸநனுடைய சதுர்முகனுடைய மனைவியான ஸரஸ்வதீ தேவியும். [வ்யபதேச்யவாச: வ்யாஸாதயோபி] ஸுப்ரஸித்தமான வாக்வைபவம் பொலிந்த வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளும். ... ... ... ... (6)

{ மந்தோபவிஷ்யந்நியதம் விரிஞ்சோ வாசாம் நிதே வஞ்சிதபாகதேய:,
தைத்யாபநீதாந் தயயைவ பூயோப்யத்த்யாபயிஷ்யோ நிகமாந் ந சேத் த்வம். 7 }

[வாசாம் நிதே]—வாக்குக்கு அதிஷ்டாந தேவதையான ஹயக்ரீவ பகவானே! [தைத்யாபநீதாந் நிகமாந் பூயோபி தயயைவ த்வம் அத்யாபயிஷ்ய: ந சேத்]—மதுகைடபர்களென்னும் அசுரர்களாலே கவரப்பட்ட வேதங்களைப் பரமக்ருபையோடு தேவரீர் மீட்டுக்கொடுத்து (நான்முகனுக்கு) ஓதுவித்திலீராகில், [விரிஞ்ச: வஞ்சிதபாகதேய: மந்த: அபவிஷ்யத்] நான்முகனானவன் தௌர்ப்பாக்யோபஹதனாய் விவேகசூன்யனாகவே திண்ணமாக ஆகியிருப்பன். "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிறபடியே எம்பெருமான் பக்கலில் வேதங்களைப் பெற்றிருந்த நான்முகன் அந்த வேதங்களைப் பறிகொடுத்து கண்ணிழந்தேன் தனமிழந்தேனென்று கதறி நிற்க, அப்போது * பன்னுகலை நால்வேதப் பொருளையெல்லாம் பரிமுகமாயருளிய வெம்பரமன் காண்மின்* என்கிறபடியே ஹயக்ரீவ ரூபியாய் எம்பெருமான் தோன்றி வேதாபஹாரிகளான அசுரர்களைப் பொருது கொன்று வேதங்களை மீட்டுக் கொணர்ந்து மீண்டும் பிரமனுக்கு உபதேசித்தருளி வாழ்வித்தனனென்ற இதிஹாஸம் இங்கு அநுஸந்தேயம். ... ... ... ... (7)

{ விதர்க்கடோலாம் வ்யவதூய ஸத்த்வே ப்ருஹஸ்பதிம் வர்த்தயஸே யதஸ்த்வம்,
{ தேநைவ தேவ த்ரிதசேச்வராணும் அஸ்ப்ருஷ்டடோலாயிதமாதிராஜ்யம். 8 }

[ஹே தேவ! த்ரிதசேச்வராணும் ஆதிராஜ்யம் அஸ்ப்ருஷ்டடோலாயிதம்] வாரீர் ஹயக்ரீவ பகவானே! இந்திரன் முதலிய தேவர்களுக்கும் ஸ்வர்க்காதிபத்யம் நிலைத்து நிற்பதானது உம்மதீனமே காணும்; ஏனென்னில் [யத: ப்ருஹஸ்பதிம் விதர்க்கடோலாம் வ்யவதூய த்வம் ஸத்த்வே வர்த்தயஸே, தேநைவ] தத்வஜ்ஞானத்தில் தளர்ச்சியுண்டாகாதபடி ரஜஸ் தமஸ்ஸுக்களைத் தவிர்த்து ஸத்வத்தில் நிலை நின்றவனாக ப்ருஹஸ்பதியை அநுக்ரஹித்தருளாநின்றீராதலால்.

ஹயக்ரீவனது திருவருளால் ப்ருஹஸ்பதி நிஷ்களங்கமான ஞானம்பெற்று தேவர்களுக்குப் புரோஹிதனாக இருந்துவருவதனால் அவர்களது சுவர்க்கச் செல்வம் வைரிகளால் அசைக்கவொண்ணாததாக ஊர்ஜிதமாய் விளங்கிவருகின்றதென்றவாறு. ஹஸ்திகிரி மாஹாத்மியத்திலே இதற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமுண்டு. ... (8)

{ அக்னௌ ஸமித்தார்ச்சிஷி ஸப்ததந்தோ: ஆதஸ்த்திவாந் மந்த்ரமயம் சரீரம்,
{ அகண்டஸாரைர்ஹவிஷாம் ப்ரதாநைராப்யாயநம் வ்யோமஸதாம் விதத்ஸே 9 }

வாரீர் ஹயக்ரீவரே! [ஸப்ததந்தோ: ஸமித்தார்ச்சிஷி அக்னௌ மந்த்ரமயம் சரீரம் ஆதஸ்த்திவாந் ஸந்]—தேவரீர் ப்ரஜ்வலிதமான யாகாக்நியிலே மந்த்ரஸ்வரூபமான திருமேனியைப் பரிக்ரஹித்துக் கொண்டிருந்து, [அகண்டஸாரை: ஹவிஷாம் ப்ரதாநை:] சுவைமிகுந்த புரோடாசாதி விதரணங்களினாலே, [வ்யோமஸதாம் ஆப்யாயநம் விதத்ஸே]-தேவர்களுக்கு த்ருப்தியை தேவரீரே உண்டுபண்ணுநின்றீர். "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச" என்று சொன்ன பகவானில் வேறுபட்டவரல்லரே ஹயக்ரீவர்.

மூன்றும் பாதத்தில் ப்ரதாநே: ப்ரதாநை: என்று இருவகையான பாடங்களுள்ளன. அகண்டஸாரை: என்கிற விசேஷணம் ஹவிஸ்ஸிலல்லாமல் ப்ரதானத்திலே அந்வயிக்க வேண்டியிருத்தலால் ப்ரதாநே: என்கிற பாடம் நன்கு பொருந்துமென்பர். ஹவிஷாம் ப்ரதாநே:-ப்ரதானஹவிர்ப்பிரித்யர்த்த:. சருபுரோடாசாதிபிரிதி யாவத். "அக்நயே ஸ்வாஹா" இத்யாதி மந்த்ரமயமான சரீரத்தையடைந்திருந்து அவ்வோ தேவதைகளுக்கு அந்தர்யாமியான தான் அந்த ஹவிஸ்ஸுக்களைப் பெற்று, "அங்காந்யந்யா தேவதா:" என்று சரீர பூதர்களாகச் சொல்லப்பட்ட தேவர்களுக்கும் த்ருப்தியை விளைப்பதாகச் சொல்லிற்றாயிற்று. ... ... ... ... ... (9)

{ யந்மூலமீத்ருக் ப்ரதிபாதி தத்வம் யா மூலமாம்நாயமஹாத்ருமாணும்,
{ தத்வேந ஜாநந்தி விசுத்தஸத்வா: தாமக்ஷராமக்ஷரமாத்ருகாம் தே. (10) }

அக்ஷரஸமஷ்டி ஸ்வரூபமான அக்ஷரமாத்ருகையென்கிற வாக்தேவதையும் ஹயக்ரீவரிட்ட கட்டளையென்கிறார் இதில். வாரீர் ஹயக்ரீவரே! [ஈத்ருக் தத்வம் யந்மூலம் ப்ரதிபாதி] இங்ஙனே கண்ணுக்குத் தோன்றுகின்ற மஹதாதி தத்வமெல்லாம் எந்த அக்ஷரமாத்ருகையடியாகத் தோன்றியுள்ளதோ; [ஆம்நாயமஹாத்ருமாணும் யா மூலம்] வேதங்களாகிற பெரிய வ்ருக்ஷங்களுக்கும் எந்த அக்ஷரமாத்ருகையே வேராக விளங்காநின்றதோ, [அக்ஷராம் தாம் அக்ஷரமாத்ருகாம்] ஒருகாலும் அழிவற்றதான

அந்த அக்ஷரமாத்ருகையை, [விதுத்தஸத்வா: தத்வேந த்வாம் ஜாநந்தி] சுத்த ஸாத்விகர்களான மஹான்கள் உள்ளபடி தேவரீராகவே அறிகின்றூர்கள்.

* பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதிமானுங்காரமனங்களே* என்கிற இருபத்திநன்கு தத்துவங்களே ஈத்துந் தத்வம் என்பதனுல் சொல்லப்பட்டது. இங்கு அக்ஷரமாத்ருகையென்று ப்ரணவத்தைச் சொல்லுகிறது. ப்ரணவத்தில் நின்றுமே ஸகல தத்வங்களும் வேதங்களும் உதயமாகின்றன. அந்த ப்ரணவம் ஹயக்ரீவாத்மகமே யென்கை. ... (10)

{ அவ்யாக்ருதாத் வ்யாக்ருதவாநஸி த்வம் நாமாநி ரூபாணி ச யாநி பூர்வம்,
சம்ஸந்தி தேஷாம் சரமாம் ப்ரதிஷ்டாம் வாகீச்வர த்வாம் த்வதுபஜ்ஞவாச:. 11 }

ப்ரக்ருதி முதலானவற்றை அநுப்ரவேசித்துப் பிரிவினை செய்து நாமரூபங்களை விவேகித்ததும் ஹயக்ரீவ மூர்த்தியேயென்கிறது இதில். [ஹே வாகீச்வர] வாரீர் ஹயக்ரீவரே! [த்வம் பூர்வம் அவ்யாக்ருதாத் யாநி நாமாநி ரூபாணி ச வ்யாக்ருதவாந் அஸி] அவ்யாக்ருதமென்று சொல்லப்படுகிற மூலப்ரக்ருதியில் நின்றும் எந்த நாமரூபங்களை தேவரீர் வகுத்தருளினீரோ, [தேஷாம் சரமாம் ப்ரதிஷ்டாம் த்வாம் சம்ஸந்தி] அந்த நாமரூபங்களுக்குப் பர்யவஸாந பூமியாக தேவரீரைச் சொல்லுகிறூர்கள்; அப்படிச் சொல்லுகிறவர்கள் யாவரென்னில்; [த்வதுபஜ்ஞவாச:] உம்மைபிட்டுத் தோன்றிய வாக்குக்களில் வல்லவர்களான வைதிகர்கள் என்றபடி. "அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி" என்கிற ச்ருதியை உட்கொண்டு பூர்வார்த்தமருளிச் செய்தது. (தேஷாம் சரமாம் ப்ரதிஷ்டாம் த்வாம் சம்ஸந்தி) என்றதன் கருத்து யாதெனில், வேதாந்த வ்யுத்பத்தியுடையார்க்கு அபர்யவஸாநவ்ருத்தியினுல் எந்த நாமரூபங்களும் எம்பெருமானளவும் செல்ல ப்ரத்யாயகங்களாயிருக்குமென்பது பரமார்த்தம். அவ்வெம்பெருமானே ஹயக்ரீவமூர்த்தியென்றதாயிற்று. ... ... (11)

{ முக்தேந்து நிஷ்யந்த விலோபநீயாம் மூர்த்திம் தவாநந்தஸுதா ப்ரஸூதிம்.
விபச்சிதச்சேதஸி பாவயந்தே வேலாமுதாராமிவ துக்தஸிந்தோ:. 12 }

வாரீர் ஹயக்ரீவரே! [முக்தேந்து நிஷ்யந்த விலோபநீயாம்] இளம் பிறைச் சந்திரனுடைய நிலவுபோலே ரமணீயமானதும், [ஆநந்தஸுதாப்ரஸூதிம்] ஆனந்தாம்ருதப்ரவாஹத்திற்குப் பிறப்பிடமாகவுள்ளதும், [துக்தஸிந்தோ: உதாராம் வேலாமிவ ஸ்திதாம்] பாற்கடலின் அழகிய (அல்லது) பெரிதான கரைபோன்றுள்ளதுமான, [தவ மூர்த்திம்] தேவரீருடைய திருமேனியை, [விபச்சித: சேதஸி பாவயந்தே] ஞானிகள் தங்கள் உள்ளத்துள் சிந்தனை செய்கிறூர்கள். ஹயக்ரீவ திவ்ய மங்கள விக்ரஹத்யான கீர்த்தனமிது. ... ... .... .... .. ... (12)

{ மநோகதம் பச்யதி யஸ்ஸதா த்வாம் மநீஷிணாம் மாநஸராஜஹம்ஸம்,
ஸ்வயம்புரோபாவ விவாதபாஜ: கிங்குர்வதே தஸ்ய கிரோ யதார்ஹம் 13 }

வாரீர் ஹயக்ரீவரே! [மநீஷிணாம் மாநஸராஜஹம்ஸம் த்வாம்]—விவேகிகளான வித்வான்களுடைய மநஸ்ஸாகிற மாநஸஸரஸ்ஸிலே விளங்கும் ராஜ ஹம்ஸம் போன்ற தேவரீரை, [ய: ஸதா மநோகதம் பச்யதி]—யாவனெருவன் எப்போதும் சிந்தையில் வைத்துப்பார்க்கிறுனே, [தஸ்ய]—அப்படி தேவரீரைச் சிந்திக்கும் மஹானுக்கு, [கிர:]-வாக்குக்களானவை, [ஸ்வயம்புரோபாவவிவாதபாஜ: ஸந்த:]—தானே

முன் செல்வேன் நானே முன் செல்வேன் என்று ஸ்பர்த்தைபண்ணிக்கொண்டு [யதார்ஹம் கிங்குர்வதே]—தக்கவாறு கைங்கரியம் செய்யப்பெறுகின்றன. வாகீச்வர ரைச் சிந்தை செய்வார்க்கு வாக்குக்களெல்லாம் அஹமஹமிகயா வந்து தோன்றி ஏவல் தொழில் செய்கின்றனவாம். பெருமாளுக்கு மந்த்ரக்ராமங்கள் "இமே ஸ் கிங்கரா:" என்று நின்றதுபோல. மூன்றும் பாதத்தில் புரோபாவ, புரோவாத என்பன பாடபேதங்கள். ... ... ... ... ... (13

{ அபி க்ஷணர்த்தம் கலயந்தி யே த்வாமாப்லாவயந்தம் விசதைர்மயூகை:,
வாசாம் ப்ரவாஹைரநிவாரிதைஸ்தே மந்தாகிநீம் மந்தயிதும் க்ஷமந்தே. 14 }

வாரீர் ஹயக்ரீவரே! [விசதை: மயூகை: ஆப்லாவயந்தம் த்வாம்]—ஸ்வச்சமா கிரணங்களினால் அடியார்களை அம்ருத ஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவராக் கின்ற தேவரீரை, [க்ஷணர்த்தம் அபி யே கலயந்தி] அரை நொடிப்பொழுதாகிலும் சி திப்பவர்கள் யாவரோ. [தே]—அப்படிப்பட்ட மஹான்கள்; [அநிவாரிதை: வாசா ப்ரவாஹை: மந்தாகிநீம் மந்தயிதும் க்ஷமந்தே] தட்டுத் தடங்கலின்றி வெள்ளமிட வல்ல வாக்குப் பெருக்குக்களால் கங்கை நீர்ப் பெருக்கையும் வெல்லவல்லராவா ஸ்வல்ப த்யானத்தின் பலன் இதுவானால் அநவரத சிந்தனையின் பலன் வாக்குக் நிலமாமோ வென்றபடி.

{ ஸ்வாமிந் பவத்த்யாநஸுதாபிஷேகாத் வஹந்தி தந்யா: புலகாநுபந்தம்,
அலக்ஷிதே க்வாபி நிருடமூலமங்கேஷ்விவாநந்தது மங்குரந்தம். 15 }

[ஸ்வாமிந்!] எந்தையான ஹயக்ரீவரே! [தந்யா:]-சில ஸுக்ருதிகள், [பவத்த்யா ஸுதாபிஷேகாத் புலகாநுபந்தம் வஹந்தி]—தேவரீரைச் சிந்தை செய்வதாகி அம்ருதாபிஷேகத்தினால் மயிர்க்கூச்சு அருதிருக்கப்பெறுகின்றனர். அந்த புலக நுபந்தம் எப்படிப்பட்டதென்னில்; [அலக்ஷிதே க்வாபி நிரூடமூலம் அங்கேஷு அங் குரந்தம் ஆநந்தம் இவ ஸ்திதம்]—கண்ணுக்குத் தெரியாததோரிடத்திலே (ஹ்ருதய தினுள்ளே) வேரூன்றப்பெற்று வெளியவயவங்களிலே அங்குரித்த ஆனந்தமோ என் லாம்படியாயிருக்கும். உள்ளே தோன்றிய ஆனந்த வெள்ளமானது ரோமாஞ் வ்யாஜேந வெளிக்கிளம்பியதோவென்னும்படியிருக்குமென்கை. (1

{ ஸ்வாமிந் ப்ரதீசா ஹ்ருதயேந தந்யா: த்வத்த்யாநசந்த்ரோதயவர்த்தமாநம்,
அமாந்தமாநந்தபயோதிமந்த: பயோபிரக்ஷ்ணாம் பரிவாஹயந்தி. 16 }

[ஹே ஸ்வாமிந்] வாரீர் ஹயக்ரீவ பகவானே! [தந்யா:] பாக்யசாலிகளா மஹான்கள் [ப்ரதீசா ஹ்ருதயேந] வெளி நோக்கற்றதான ஹ்ருதயத்தினால், [த்வ த்யாநசந்த்ரோதயவர்த்தமாநம்] உம்மைச் சிந்தனை செய்வதாகிற சந்திரோதய தினால் அபிவிருத்தியடையா நின்றதும், [அந்த: அமாந்தம்] உள்ளே அடங்கியிருக் மாட்டாததுமான. [ஆநந்தபயோதிம்] ஆனந்தவமுதக் கடலை, [அக்ஷ்ணாம் பயோபி: ப வாஹயந்தி] கண்ணீர்களாலே வெள்ப் பெருக்குடையதாகச் செய்கின்றார்கள்.

ஹயக்ரீவமூர்த்தியைச் சிந்தை செய்பவர்கள் ஆனந்தபாஷ்பம் நிரம்பி கண்களையுடையவர்களாயிருப்பது இயல்பு. "பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ர க்ரியா" என்று பவபூதிகவி சொன்னப்போலே ஏரியினுள் அபரிமிதமான தண்ணீ நிரம்பினால் ஏரி உடைந்து கெடாதபடிக்கு ஒரு புறம் கலுங்கலெடுத்துவிட்டு ஏ காக்கப்படும். அதுபோல, ஹயக்ரீவமூர்த்தி த்யானத்தினால் ஹ்ருதயத்தினுள்ளே

அபரிமிதமான ஆனந்த வெள்ளம் நிரம்பி அது பரீவாஹஸாபேக்ஷமாகவே கண்வழியாய்ப் பரீவாஹங்கொண்டதென்று அருளிச் செய்தவிதனல், ஹயக்ரீவமூர்த்தித்யானத்தில் ஊன்றினவர்கள் அகமகிழ்ந்து கண்ணுங்கண்ணீருமாயிருக்கின்றார்களென்றதாயிற்று. (16)

{ ஸ்வைராநுபாவாஸ் த்வததீநபாவா: ஸம்ருத்தவீர்யாம் த்வதநுக்ரஹேண,
விபச்சிதோ நாத தரந்தி மாயாம் வைஹாரிகீம் மோஹநபிஞ்சிகாம் தே. 17 }

ஹேநாத! வாரீர் ஹயக்ரீவ பகவானே! [ஸ்வைராநுபாவா:] தட்டுத்தடங்கலின்றி வளர்ந்து விளங்குகின்ற பெருமை படைத்தவர்களும், [த்வததீநபாவா:] தேவரீருக்கு வசமாக்கின தங்கள் சிந்தனையையுடையவர்களுமான, விபச்சித:— வித்வான்கள் வைஹாரிகீம்-க்ரீடா பரிகாரமானதும், மோஹநபிஞ்சிகாம்- இந்திரஜாலக் கருவிபோன்றதுமான தே மாயாம்-உம்முடைய மாயையான பிரகிருதியை, [த்வதநுக்ரஹேண ஸம்ருத்தவீர்யாம் தரந்தி] உம்முடைய அநுக்ரஹத்தினல் வீர்யமற்றதாக்கிக் கடக்கின்றார்கள்.

"தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா, மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே." என்று கீதையில் அருளிச் செய்ததைத் திருவுள்ளம்பற்றி இந்த ச்லோகமருளிச் செய்யப்பட்டது. இதில் முதல்பாதம் [ஸ்வைராநுபாவத்வததீநபாவா:] என்கிற பாடமாகவும் வழங்கும். அப்பாடத்தில் ஸ்வைராநுபாவ! என்று தனிப் பதமாக்கி ஸம்போதனமாகவுங் கொள்ளலாம்; ஸமஸ்தபதமாகவே கொண்டு ஸ்வேச்சாவிஹாரசாலியான உமக்கு அதீநமான சிந்தனையையுடையவர்களென்றும் பொருள் கொள்ளலாம். விவிதம் பச்யந்தீ சித் யேஷாம் தே விபச்சித:. (வைஹாரிகீம்) —*த்வம் ந்யஞ்சத்பிருதஞ்சத்பி: கர்மஸூத்ரோ பாதிதை:, ஹரே! விஹரஸி க்ரீடாகந்துகைரிவ ஜந்துபி* என்று சொல்லப்பட்ட இன்புறுமிவ்விளையாட்டுக்கு இந்த மாயையே உபகரணமாயிருப்பதால் வைஹாரிகீம் எனப்பட்டது. லீலைக்கு உபகரணமான வென்றபடி. மாயைக்கு த்வதநுக்ரஹேண ஸம்ருத்தவீர்யாம் என்று விசேஷணமிட்டதனல் அவன் திருவடிகளையே பற்றி அவனது அநுக்ரஹத்திற்கு இலக்கானவர்கள் திறத்திலே இந்த மாயையின் வீர்யம் விலை செல்லாதென்று காட்டப்பட்டது. (மோஹநபிஞ்சிகாம்) உலகில் இந்திர ஜாலம் செய்பவர்கள் விவிதவிசித்ராநந்தாச்சர்யகர கார்யஜநநஸமர்த்தமானதொரு மயூர பிஞ்சத்தை வைத்துக்கொள்வரென்பது ப்ரஸித்தம்; அது போன்றதாம் பகவானுடைய மாயை.

கீதாசார்யனுக்கும் ஹயக்ரீவனுக்குமுள்ள ஐக்யமும் இந்த ச்லோகத்தினல் தெரிவிக்கப்பட்டது. (17)

{ ப்ராங் நிர்மிதாநாம் தபஸாம் விபாகா: ப்ரத்யக்ரநிச்ரேயஸ ஸம்பதோ மே,
ஸமேதிஷீரந் தவ பாதபத்மே ஸங்கல்பசிந்தாமணய: ப்ரணமா:. 18 }

வாரீர் ஹயக்ரீவரே! [தவ பாதபத்மே மே ப்ரணமா: ஸமேதிஷீரந்] உம்முடைய திருவடித் தாமரைகளில் அடியேனுடைய ப்ரணாமங்கள் அபிவிருத்தியடையவேணும். அந்தரணாமங்கள் எப்படிப்பட்டவை யென்னில், [ப்ராக் நிர்மிதாநாம் தபஸாம் விபாகா] ப்ரணாமம் ஜன்மாந்தரஸஹஸ்ரநல்தவப்பயன் என்றபடி. முற்பிறப்புக்களிலே அருந்தவம் புரிந்தவர்களுக்கே ஸ்ரீ ஹயக்ரீவ பாதாரவிந்தங்களிலே பண்ணவேணுமென்கிற ருசி பிறக்குமென்றபடி. [ப்ரத்யக்ர நிச்ரேயஸஸம்பத:] புதிது புதிதான நன்மை நலங்களை விளைவிக்கும் அந்த ப்ரணாமங்கள். 'ப்ரத்யக்ரா நிச்ரேயஸஸம்

பத் யைஸ்தே' என்று பஹுவ்ரீஹிபண்ணலாம்; அன்றி ஸமாநாதிகரண தத்புருஷனு கவே கொண்டு ப்ரத்யக்ரநிச்ரேயஸஸம்பதஸ்வரூபங்களென்றுங் கொள்ளலாம். [ஸங்கல்பசிந்தாமணய:] அவரவர் நினைத்த பொருள்களையெல்லாம் அளிக்க வல்லவை யென்க. ஸங்கல்பிக்கப்பட்ட அர்த்தங்கள் விஷயத்தில் சிந்தாமணி போன்றவை என்ற வாறு. (18)

{ விலுப்தமூர்த்தந்யலிபிக்ரமாணும் ஸுரேந்த்ரசூடாபதலாலிதாநாம்.
{ த்வதங்கரிராஜீவரஜ:கணாநாம் பூயாந் ப்ரஸாதோ மயி நாத பூயாந். 19 }

ஹே நாத! ஸ்வாமிந் ஹயக்ரீவரே! [த்வதங்க்ரிராஜீவரஜ:கணாநாம் பூயாந் ப்ரஸாதோ மயி பூயாத்] தேவரீருடைய திருவடித் தாமரைகளின் சிறுதுகள்களினுடைய மிக்க அநுக்ரஹம் அடியேன் திறத்திலாகக்கடவது. அந்தச் சிறிய தூள் எப்படிப்பட்டவை யென்னில், [விலுப்த மூர்த்தன்யலிபிக்ரமாணும்] அவரவர்களுடைய தலையெழுத்துக்களை லோபம் செய்யக்கூடியவை. மூடனுகவோ தரித்ரனுகவோ மற்றெவ்விதமாகவோ இருக்கும்படி பிரமனுல்) தலையெழுத்து ஏற்பட்டிருந்தாலும் ஹயக்ரீவனுடைய திருவடித் தாமரைகளின் ரேணுபரமாணு பட்டவளவிலே அது மாறிப்போகுமென்றபடி. பாதுகாஸஹஸ்ரத்தில் "பரிஸரவிததாநாம் மூர்த்நி துர்வர்ணபங்க்திம் பரிணாயதி சௌரே: பாதுகே த்வம் ஸுவர்ணம்" என்றருளிச் செய்த ச்லோகமும் இங்கே அநுஸந்தேயம். "அயம் தரித்ரோ பவிதேதி வைதஸீம் லிபிம் லலாடே" என்கிற நைஷதீய ச்லோகத்தினுல் அந்த லிபி லலாடத்திலுள்ளதாக விளங்கினுலும் குறையொன்றுமில்லை. லலாட லிபியென்றும் சிரோ லிபியென்றும் இரண்டுபடியாகவுஞ் சொல்வதுண்டு.

[ஸுரேந்த்ரசூடாபதலாலிதாநாம்] தேவதா ச்ரேஷ்டர்களான பிரமன் சிவனிந்திரன் முதலானவர்கள் தங்கள் தலைகளினுலேற்றுக் கொண்டாடுவர்களாம் ஹயக்ரீவ பாதாரவிந்த ரேணுகணங்களை. ஆக இப்படிப்பட்ட ரஜ:கணங்களின் அநுக்ரஹம் தம் பக்கலில் பெருகவேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. ... (19)

{ பரிஸ்ப்புரந்நூபுரசித்ரபாநுப்ரகாசநிர்த்தூத தமோநுஷங்காம்,
{ பதத்வயீம் தே பரிசின்மஹேந்த: ப்ரபோதராஜீவவிபாதஸந்த்யாம். 20 }

வாரீர் ஹயக்ரீவரே! [தே பதத்வயீம் அந்த: பரிசிந்மஹே] தேவரீருடைய திருவடியிணையை நெஞ்சினுள்ளே சிந்தனை செய்கிறோம். அந்தத்திருவடியிணை எப்படிப்பட்ட தென்னில்; [பரிஸ்ப்புரந்நூபுரசித்ரபாநுப்ரகாசநிர்த்தூத தமோநுஷங்காம்] தன்னிடத்து விளங்காநின்ற நூபுரங்களாகிற ஸூர்யனுடைய வொளியினுலே அகவிருளின்தொடர்பை யொழிக்குமது. இன்னமும் எப்படிப்பட்டதென்னில், [ப்ரபோதராஜீவவிபாதஸந்த்யாம்] சிறந்த ஞானமாகிற தாமரை மலருவதற்கு ப்ராதஸ்ஸந்த்யை யென்னலாம் படியுள்ளது. ஆக அகவிருளையொழித்து நல்லவுணர்ச்சியை விளைக்கவல்லதான தேவரீருடைய திருவடியிணையைச் சிந்தை செய்வோ மென்றதாயிற்று.

நூபுரமாவது பாதபூஷணம். சித்ரபாநு—ஸூர்யன். ... ... (20)

{ த்வத்கிங்கராலங்கரணேசிதாநாம் த்வயைவ கல்பாந்தர பாலிதாநாம்,
{ மஞ்ஜுப்ரணாதம் மணிநூபுரம் தே மஞ்ஜூஷிகாம் வேதகிராம் ப்ரதீம:. 21 }

வாரீர் ஹயக்ரீவரே! [மஞ்ஜுப்ரணாதம் தே மணிநூபுரம் வேதகிராம் மஞ்ஜூஷிகாம் ப்ரதீம:] செவிக்கினிய வொலியையுடைத்தாய் ரத்னமயமான தேவரீருடைய பாட

கத்தை வேதவாக்குக்களின் பெட்டியாக எண்ணுகிறோம். நூபுர த்வநியை வேத த்வநியாகவே நினைக்கிறோமென்பது கருத்து. அந்த வேதவாக்குகள் எப்படிப்பட்டவை யென்னில்; [த்வத்கிங்கராலங்கரணோசிதாநாம்] தேவரீருடைய கைங்கர்யபரர்களுக்கு அலங்காரமாயிருக்கத் தகுதியானவை. “ப்ராஹ்மணாநாம் தநம் வேத:” என்கிறபடியே அந்தணர்கள் வேதத்தையே செல்வமாகக் கொண்டு வேத பாராயண கைங்கர்யத்திலேயே அலங்காரம் பெறுகின்றார்களாதலால் இங்ஙனே சொல்லிற்று. அந்த வேதவாக்குக்கள் இன்னமும் எப்படிப்பட்டவையென்னில், [த்வயைவ கல்பாந்தரபாலிதாநாம்] கல்பந்தோறும் தேவரீராலேயே காக்கப்படுபவை. ஆக இப்படிப்பட்ட வேதவாக்குக்கள் தேவரீருடைய மணிநூபுரமாகிற திவ்ய பேடிகையிலே வைத்து ரக்ஷிக்கப்படுவனவாக நினைக்கிறோமென்றாராயிற்று.

இதில் (த்வத்கிங்கராலங்கரணோசிதாநாம்) என்கிற விசேஷணம் விபக்திக்கு அநுகுணமாக வேதவாக்குக்களில் அந்வயிக்குமதானாலும் மணிநூபுரத்திலும் அந்வயிப்பதாக மாநஸபோதமாகக்கடவது. ... ... ... (21)

{ ஸஞ்சிந்தயாமி ப்ரதிபாதசாஸ்த்தாந் ஸந்துக்ஷயந்தம் ஸமயப்ரதீபாந்,
விஜ்ஞாநகல்பத்ருமபல்லவாபம் வ்யாக்யாநமுத்ராமதுரம் கரம் தே. 22 }

இது முதல் மூன்று ச்லோகங்களினால் ஹயக்ரீவருடைய திருக்கையிலே ஊன்றுகிறார்.

வாரீர் ஹயக்ரீவரே! [வ்யாக்யாநமுத்ராமதுரம் தே கரம் ஸஞ்சிந்தயாமி] வியாக்கியான முத்திரையினால் அழகுபெற்றுள்ள தேவரீருடைய திருக்கையைச் சிந்தனை செய்கிறேன். அந்தத்திருக்கை எப்படிபட்டதென்னில் [ப்ரதிபாதசாஸ்த்தாந் ஸமயப்ரதீபாந் ஸந்துக்ஷயந்தம்] பரதிபையாகிற திரியிலே உள்ளவையான ஸித்தாந்தப்பொருள்களாகிற திருவிளக்குகளை நொந்துகின்றதாம். உலகில், விளக்குத்திரி எரியாமல் உள்ளே புகுங்கால் கையால் நொந்தி எரியச்செய்வது வழக்கமன்றோ. அப்படியே ஹயக்ரீவருடைய திருக்கையமைப்பு ஸிந்தாந்தார்த்த ப்ரதீபங்களை நொந்துவது போன்றுள்ளதாகக் கூறினவிது மிகநன்று. யதிராஜஸப்ததியில் “உத்க்ருஹ்ணதீமுபநிஷத்ஸு நிகூடமர்த்தம் சித்தே நிவேசயிது மல்பதியாம் ஸ்வயம் ந:” என்றருளிச் செய்வதுபோல் இதுவும் ஒரு ரஸவத்தரமான உல்லேகம். “ஹார்த்தும் தமஸ்ஸதஸதீ ச விவேக்து மீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி” என்று பட்டர் அருளிச் செய்ததைத் திருவுள்ளம்பற்றி (ஸமயப்ரதீபாந்) என்றார். ஸமயமென்று சாஸ்திரங்களையே விவக்ஷிக்கவுமாம். (ப்ரதிபாதசாஸ்த்தாந்) நவநவோந்மேஷசாலிநியான மேதைக்கு ப்ரதிபையென்று பெயர். “மேதாம் நவநவோந்மேஷசாலிநீம் ப்ரதிபாம் விது:” என்பர்கள். தசா—திரி. ப்ரதிபையாகிற திரியிலே சாஸ்த்ர விளக்குகள் இருக்கின்றனவாகக் கூறினவிது மிகப்பொருத்தம். விளக்கை நொந்துமவர்கள் திரியைத்தானே நொந்துவர்கள். ஹயக்ரீவகடாக்ஷத்தினால் ப்ரதிபை அபிவிருத்தியடையு மென்றதாயிற்று.

ஹயக்ரீவருடைய திருக்கை இன்னமும் எப்படிபட்டதென்னில் [விஜ்ஞாந கல்பத்ருமபல்லவாபம்] விஜ்ஞானமாகிற கல்பவ்ருக்ஷத்தில் தோன்றிய தளிர் கொல்! என்னலாம்படியுள்ளது ஆக இப்படிப்பட்ட ஹயக்ரீவரது முத்திரைக்கையைச் சிந்தனைசெய்கிறேனென்றாராயிற்று. ... ... ... ... ... (22)

{ சித்தே கரோமி ஸ்புரிதாக்ஷமாலம் ஸவ்யேதரம் நாத கரம் த்வதீயம்,<br>ஜ்ஞாநாம்ருதோதஞ்சநலம்படாநாம் லீலாகடீயந்த்ர மிவாச்ரிதாநாம். (23) }

[ஹே நாத] ஸ்வாமிந் ஹயக்ரீவரே! [ஸ்புரிதாக்ஷமாலம் த்வதீயம் ஸவ்யேதரம் கரம் சித்தே கரோமி] ஜபமாலை விளங்கப்பெற்ற தேவரீரது வலத்திருக்கையை உள்ளத்திற் கொள்ளுகின்றேன் அத்திருக்கை எப்படிப்பட்டதென்னில்; [ஜ்ஞாநாம்ருதோதஞ்சநலம்படாநாம் ஆச்ரிதாநாம் லீலாகடீயந்த்ரமிவ ஸ்திதம்] என்று உத்ப்ரேக்ஷிக்கிறபடி. ஞானமாகிற அமுதத்தைக் கொள்ள வேணுமென்கிற ஊற்றமுடைய பக்தர்களுக்கு லீலையாக அமைந்த ஏற்றம் போன்றுள்ளதாம். .... .... ... ... (23)

{ ப்ரபோதஸிந்தோரருணை: ப்ரகாசை: ப்ரவாலஸங்காத மிவோத்வஹந்தம்,<br>விபாவயே தேவ ஸபுஸ்தகம் தே வாமம் கரம் தக்ஷிணமாச்ரிதாநாம். (24) }

[ஹேதேவ!] வாரீர் ஹயக்ரீவ பகவானே! [ஸபுஸ்தகம் தே வாமம் கரம் விபாவயே] ஸ்ரீ கோசத்தோடு கூடின தேவரீரது இடது திருக்கையைச் சிந்தனை செய்கிறேன் அது எப்படிப்பட்டதென்னில், [ஆச்ரிதாநாம் தக்ஷிணம்.] (வாமமபி தக்ஷிணம்) என்று விரோதாபாஸரீதியில் அருளிச் செய்கிறபடி. இடத்திருக்கையாயிருக்கச் செய்தேயும் அடியார்களுக்கு வலத்திருக்கையாய்க் காண்கிறதென்று விரோதம். தக்ஷிணம் என்பதற்கு ஸமர்த்தம் என்றும் அர்த்தமுண்டாகையாலே அப்பொருள் கொண்டு விரோதபரிஹாரம். பக்தர்களுக்கு வித்யாப்ரதாநம் செய்வதில் ஸமர்த்தமானதென்றபடி.

இன்னமும் எப்படிப்பட்டதென்னில், [அருணை: ப்ரகாசை: ப்ரபோதஸிந்தோ: ப்ரவாலஸங்காதம் உத்வஹந்தமிவ ஸ்திதம்] சிவந்த திருக்கையில் நின்றும் சிவந்த தோக்குங்கால் ஞானக்கடலில் நின்றும் தோன்றிய பவழத் திரளைத் தாங்கி நிற்கின்றதோ வென்னும்படியாகவுள்ளது. பவழம் செந்நிறமுடையது: அது கடலில் தோன்றுமது. ஹயக்ரீவரோ ஞானக்கடல். ... .. ... (24)

{ தமாம்ஸி பித்வா விசதைர்மயூகை: ஸம்ப்ரீணயந்தம் விதுஷச்சகோராந்,<br>நிசாமயே த்வாம் நவபுண்டரீகே சரத்கனே சந்த்ரமிவ ஸ்ப்புரந்தம். (25) }

ஹயக்ரீவ திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்ய வர்ணநம் பண்ணுகிறார் வாரீர் ஹயக்ரீவரே! [நவபுண்டரீகே ஸ்புரந்தம் (அத ஏவ) சரத்கனே சந்த்ரமிவ ஸ்திதம் த்வாம் நிசாமயே] அப்போதலர்ந்த புண்டரீகத்திலே விளங்கா நிற்பதனால் சரத்காலத்து மேகமண்டலத்திலே விளங்கும் சந்திரன் போன்றுள்ள தேவரீரை ஸாக்ஷாத்கரிக்கின்றேன்.

சந்திரன் செய்யும் காரியமெல்லாம் ஹயக்ரீவர் செய்தருள்கிறாரென்பதைப் பூர்வார்த்தத்தால் நிரூபிக்கிறார். [விசதை: மயூகை: தமாம்ஸி பித்த்வா] சந்திரன் தன்னுடைய விசதமான கிரணங்களினால் புறவிருளை மாத்திரம் போக்குவன்; ஹயக்ரீவசந்திரனோ வென்னில், தனது திருமேனி விளக்கத்தினால் அகவிருளையும் புறவிருளையும் ஒருங்கே போக்கக் குறையில்லை. ப்ரகாசை:, மயூகை: என்று இரண்டு பாடங்கள்

[விதுஷ: சகோராந் ஸம்ப்ரீணயந்தம்] நிலாவையே உண்டு பசிதீரும் சகோர பக்ஷிகளை த்ருப்தி செய்விப்பவன் சந்திரன் அந்தப் பக்ஷிகள்போன்று அநந்யகதிகளான

வித்வான்களை த்ருப்தி செய்விப்பவன் ஹயக்ரீவ சந்திரன். ஆகவிப்படிப்பட்ட தேவரீரைக் கண்ணாரக் கண்டு களிக்கின்றேனென்றாராயிற்று. ... ... (25)

{ திசந்து மே தேவ ஸதா த்வதீயா தயாதரங்காநுசரா: கடாக்ஷா:,
ச்ரோத்ரே ஷு பும்ஸாமம்ருதம் க்ஷரந்தீம் ஸரஸ்வதீம் ஸம்ச்ரிதகாமதேநும். 26 }

[ஹேதேவ!] வாரீர்! ஹயக்ரீவ பகவானே [த்வதீயா: தயாதரங்காநுசரா கடாக்ஷா:] க்ருபாதரங்கங்களைப் பின் செல்லுமவையான தேவரீரது கடாக்ஷங்களானவை, [பும்ஸாம் ச்ரோத்ரேஷு அம்ருதம் க்ஷரந்தீம்] கேட்குமவர்களின் செவிகளிலே அமுதத்தைப் பெருக்காநின்றதும், [ஸம்ச்ரித காமதேநும்... ஸரஸ்வதீம்]—அடியார்களுக்குக் காமதேநு போன்றதுமான, வாக்கை, [மே ஸதா திசந்து] அடியேனுக்கு எஞ்ஞான்று மளித்திடுக.

அடியேன் செவிக்கினிய செஞ்சொற்களை அநவரதம் வெளியிட்டு பக்தர்களுக்கு ஸர்வாபீஷ்ட ஸாதகனும்படி தேவரீருடைய க்ருபா கடாக்ஷங்கள் பெருக வேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று. ... ... ... (26)

{ விசேஷவித்பாரிஷதேஷு நாத விதக்த்தகோஷ்டீ ஸமராங்கணேஷு,
ஜிகீஷதோ மே கவிதார்கிகேந்த்ராந் ஜிஹ்வாக்ரஸிம்ஹாஸநமப்யுபேயா:, (27) }

நாத! வாரீர் ஹயக்ரீவ பகவானே! [விசேஷவித்பாரிஷதேஷு] விசேஷஜ்ஞர்களான விவேகிகளை மத்யஸ்தர்களாகக் கொண்ட, [விதக்த்த கோஷ்டீ ஸமராங்கணேஷு] வித்வத்ஸமாஜ வாதப்போர்க்களத்தில், [கவிதார்க்கி கேந்த்ராந் ஜிகீஷதோ மே] கவிவரர்களையும் தார்க்கிக சிகாமணிகளையும் வென்று வீறுபெற நினைத்திருக்குமடியேனுடைய, [ஜிஹ்வாக்ரஸிம்ஹாஸநம் அப்யுபேயா:] நாக்கு நுனியாகிற சீரிய சிங்காசனத்திலே தேவரீர் அமர்ந்திருக்கவேணும்.

[பரிஷதி ஸாதவ:—பாரிஷதா:] பரிஷத்தை நிர்வஹிப்பவர்களென்றபடி, [விசேஷவித: பாரிஷதா: யேஷு தே என்று பஹுவ்ரீஹி.] .... ... ... ... (27)

{ த்வாம் சிந்தயந் த்வந்மயதாம் ப்ரபந்ந: த்வாமுத்க்ருணன் சப்தமயேந தாம்நா,
ஸ்வாமிந் ஸமாஜேஷு ஸமேதிஷீய ஸ்வச்சந்த வாதாஹவபத்தசூர:. (27) }

தேவரீரைச் சிந்தித்தவளவிலேயே வாதப்போரில்வெற்றிபெற்றவனாக வேணுமடியேன் என்று ப்ரார்த்திக்கிறார். [ஹே ஸ்வாமிந்!] வாரீர் ஹயக்ரீவபகவானே (தாஸோஹம்) அடியேன், [த்வாம் சிந்தயன் த்வந்மயதாம் ப்ரபந்ந:] தேவரீரைச் சிந்தித்து தேவரீருடைய தன்மையைப் பெற்றவனாகி, [சப்தமயேந தாம்நா (உபலக்ஷிதம்) த்வாம் உத்க்ருணந்] மந்த்ரஸ்வரூபமான திவ்ய மங்கள விக்ரஹத்தோடு கூடின தேவரீரை வாயார வாழ்த்துபவனாகி, [ஸமாஜேஷு] மஹாஸபைகளிலே, [ஸ்வச்சந்தவாதாஹவபத்தசூர: ஸமேதிஷீய] தட்டுத்தடங்கலில்லாத வாதயுத்தங்களிலே கைதேர்ந்தவனாய் விளங்கக்கடவேன்.

[த்வாம் சப்தமயேந தாம்நா உத்க்ருணன்] என்றும் அந்வயிக்கலாம். (28)

{ நாநாவிதாநாமகதி: கலாநாம் ந சாபி தீர்த்தேஷு க்ருதாவதார:,
த்ருவம் தவாநாத பரிக்ரஹாயா: நவம்நவம் பாத்ரமிதம் தயாயா:. (29) }

தம்முடைய ஆகிஞ்சந்ய அநந்யகதித்வங்களை விண்ணப்பஞ் செய்கிறார்- [நாநாவிதாநாம் கலாநாம் அகதி:] பலவகைப்பட்ட வித்யைகளைப் பயிலாதவனும், [ந சாபி தீர்த்தேஷு க்ருதாவதார:] ஸதாசார்யத் துறைகளிலே படிந்து குடைந்தாடாதவனுமான [அஹம்] அடியேன், [அநாதபரிக்ரஹாயா: தவ தயாயா:] என்போன்ற அநாதர்களையே எதிர்பார்த்திருக்கும் தேவரீரது திருவருளுக்கு, [நவம் நவம் பாத்ரம் பவாமி] விலக்ஷணமான கொள்கலமாகின்றேன். [த்ருவம்] இது திண்ணம்.

தேவரீருடைய திருவருளோ தீனர்களையே எதிர் பார்த்திருக்குமது; அடியேனைக் காட்டிலும் மேற்பட்ட தீநன் இவ்வுலகில் வேறொருவனுமில்லை; ஆதலால் அடியேன் பக்கலிலேயே தேவரீருடைய திருவருள் ப்ரஸரிக்கக்கடவது என்றாராயிற்று.

(தீர்த்தேஷு) என்பதற்கு கங்கை முதலிய தீர்த்தங்களில் என்று சிலர் பொருள் கூறுவது ஸ்வரஸமன்று. "தீர்த்தம்ருஷிஜுஷ்டஜலே குரௌ" என்பது அமரம். (அநாத பரிக்ரஹாயா:—அநாத: பரிக்ரஹ: யஸ்யா:, என்று பஹுவ்ரீஹி. ... ... (29)

அகம்பநீயாந்யபநீதிபேதை: அலங்க்ருஷீரன் ஹ்ருதயம் மதீயம்,
சங்காகலங்காபகமோஜ்வலாநி தத்வானி ஸம்யஞ்சி தவ ப்ரஸாதாத். (30)

தேவரீருடைய திருவருளால் ஸகல சாஸ்த்ர தத்வார்த்தங்களும் அடியேனுடைய உள்ளத்தில் பதியவேணுமென்று ப்ரார்த்திக்கிறார். வாரீர் ஹயக்ரீவரே! [தவ ப்ரஸாதாத் ஸம்யஞ்சி தத்வாநி மதீயம் ஹ்ருதயம் அலங்க்ருஷீரன்] தேவரீரது அநுக்ரஹத்தினால் நல்ல நல்ல உண்மைப் பொருள்கள் எனது உள்ளத்தை அலங்கரிக்கக்கடவன.

அந்த தத்துவங்கள் இருக்கவேண்டும்படியை இரண்டு விசேஷணங்களினால் சிறப்பிக்கிறார். [அபநீதிபேதை: அகம்பநீயாந்] பிறருடைய குதர்க்கங்களாலே சலிப்பிக்கவொண்ணாதவையா யிருக்கவேணும். இன்னமும் [சங்காகலங்காபகமோஜ்வலாநி] எந்த விஷயத்திலும் சங்காகளங்கம் சிறிதும் இருக்கவொண்ணாது.

தத்வார்த்தங்களை நிஸ்ஸம்சயவிபர்யயங்களாக துர்வாதிகளின் மாயவலையில் ஏமாந்து போகாமல் நிஷ்கர்ஷித்து உணரக்கடவேன் என்றாராயிற்று. (30)

வ்யாக்க்யாமுத்ராம் கரஸரஸிஜை: புஸ்தகம் சங்கசக்ரே
பிப்ரத் பிந்நஸ்படிகருசிரே புண்டரீகே நிஷண்ண:,
அம்லாநஸ்ரீரம்ருதவிசதை ரம்சுபி: ப்லாவயந் மாம்
ஆவிர்ப்பூயாதநகமஹிமா மாநஸே வாகதீச:. (31)

[கரஸரஸிஜை:] செந்தாமரைபோன்ற நான்கு திருக்கைகளாலும். [சங்கசக்ரே புஸ்தகம் வ்யாக்க்யாமுத்ராம் ச பிப்ரத்] திருவாழி திருச்சங்கு ஸ்ரீகோசம் வியாக்கியான முத்திரை ஆகிய இவை நான்கையும் தாங்கிநின்று, [பிந்நஸ்படிகருசிரே புண்டரீகே நிஷண்ண:] விரிந்த ஸ்படிகமணி போல் மநோஹரமான புண்டரீகாஸனத்தில் வீற்றிருப்பவரும், [அம்லாநஸ்ரீ:] நித்ய ஸம்ருத்தமான சோபையை யுடையவரும், (அநகமஹிமா) பழுதற்ற மஹிமைபொருந்தியவருமான (வாகதீச:) ஸ்ரீ ஹயக்ரீவர், [அம்ருதவிசதை: அம்சுபி: மாம் ப்லாவயன் ஸன்] அமுதம்போல் ஸ்வச்சமான வொளிகளாலே அடியேனைக் குளிரச் செய்யா நின்றுகொண்டு. (மம மாநஸே ஆவிர்ப்பூயாத்) எனதுள்ளத்தினுள்ளே தோன்றக்கடவர்.

அம்லாநமென்று வாடாக்குறிஞ்சிக்குப் பெயருண்டு; அதனுடைய சோபை போன்ற சோபையையுடையவர் என்றும் சிலர் சொல்லுவர். அப்போது (அம்லாந ஸ்யேவ ஸ்ரீ: யஸ்ய) என்று விக்ரஹமாகக்கடவது. ஸ்படிகமணியானது உடைபட்டால் தான் ஒளிமல்குமாதலால் (பின்னஸ்படிக) என்றது. ... ... (31)

{ வாஞ்ச்தஸித்திஹேதோ: படத ஹயக்ரீவஸம்ஸ்துதிம் பக்த்யா,
கவிதார்க்கிககேஸரிணா வேங்கடநாதேந விரசிதாமேதாம். (32) }

பலன் சொல்லித் தலைக்கட்டுகிறார். (கவிதார்கிககேஸரிணா வேங்கடநாதேந விரசிதாம் ஏதாம் ஹயக்ரீவஸம்ஸ்துதிம் வாஞ்ச்தஸித்திஹேதோ: பக்த்யா படத) கவிதார்க்கிக ஸிம்ஹ மென்று விருதுபெற்ற ஸ்ரீவேங்கடநாத தேசிகன் பணித்த இந்த ஹயக்ரீவ ஸ்தோத்ரத்தை வாக்காகிற புருஷார்த்தம் ஸித்திக்கும் பொருட்டு முகபாடம் செய்யுங்கள் என்று அன்பர்களை நோக்கியருளிச் செய்தாராயிற்று. (வாஞ்ச்த ஸித்திஹேதும்) என்பது சிலருடைய பாடமாம். அப்போது அது ஸ்துதிக்கு விசேஷணமாகும். .... .... .... .... (32)

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

இயற்றிய

ஹயக்ரீவஸ்தோத்ரவுரை முற்றுப்பெற்றது.

---